ஸ்ரீரஸ்து:



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத்வரவரமுநயே நம:

# ॥ देवाधिराज पञ्चकम् ॥

चोळसिंहपुरं दोड्डैयाचार्य इति प्रसिद्ध-

## श्री वाधूल रामानुजाचार्यवर्यैः अनुगृहीतम्

சோளஸிம்ஹபுரம் தொட்டையாசார்யர் ஸ்வாமி
தேவப்பெருமாளுடைய பெரியதிருவடி
மஹோத்ஸவ விஷயமாகப் பணித்த

# தேவாதிராஜ பஞ்சகம்

ஸ்ரீமான் உ.வே. ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் உரையுடன் கூடியது
( பதவுரை: ஸ்ரீமான் உ.வே. ஸ்ரீபெரும்பூதூர் கந்தாடை வாதூல நந்தகுமார ராமாநுஜன் )



## அவதாரிகை

தக்கானை கடிகைத்தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனியை அடைந்துய்ந்து போனேனே என்று திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்ற திருக்கடிகை யென்னும் சோளஸிம்ஹபுரத்தில் மஹாவித்வத் சிகாமணியாய் எழுந்தருளியிருந்த தொட்டையாசார்ய ஸ்வாமி, ஸம்வத்ஸரந்தோரும் காஞ்சீ தேவப பெருமாளுடைய வையங்கண்ட வைகாசித் திருநாளுக்குக் கச்சிப்பதியேற வெழுந்தருளி அத்தாணிச்சேவகம் செய்ய மகிழ்வது வழக்கம்; ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருள ஸௌகர்ய மற்று, மூன்றாநாள் பெரிய திருவடி ஸேவைக்காவது எழுந்தருளவேணுமென்று பாரித்திருக்கையில் அது தனக்கும் க்ஷமரன்றிக்கே அத்தியூரான் புள்ளையூர்வான் என்கிற பூதத்தாழ்வார் பாசுரத் தையே சிந்தித்து வாயாரவேத்தியிருக்கையில், இப்பெரியாருடைய பரமபக்திக்கு உகந்த பேரருளாளன் கச்சி நகரில் காட்சி தந்தருள்வது போலவே அங்கு இவர்க்கு ஸேவைஸாதித்தருள, அப்போது அநுபவபரீவாஹ ரூபமாக அவதரித்தது இந்த தேவாதிராஜ பஞ்சகம். இந்த ஐந்து ஸ்லோகங்களிலும் பெரியதிருவடி வாஹனத்தின் பெருமையொன்றே பேசப் பட்டுள்ளது.

### க்ரந்தாரம்பம்

प्रत्यूषे वरदः प्रसन्नवदनः प्राप्ताभिमुखयान् जनान्
आबद्धाञ्जलिमस्तकानविरलानाबालमानन्दयन् ।
मन्दोड्डायितचामरो मणिमयश्वेतातपत्रः शनैः
अन्तर्गोपुरमविराम भगवानारूढपक्षीश्वरः ॥१॥

1. ப்ரத்யூஷே வரத: ப்ரஸந்நவதந: ப்ராப்தாபிமுக்யாந் ஜநாந்
ஆபத்தாஞ்ஜலி மஸ்தகாநவிரலாநாபாலமாநந்தயந்
மந்தோட்டாயித சாமரோ மணிமய ச்வேதாதபத்ரைச் சநை:
அந்தர்கோபுரம் ஆவிராஸ பகவாந் ஆரூட பக்ஷீச்வர:

## பதவுரை

*ப்ரத்யூஷே* - பின்மாலையில், *ப்ரஸந்ந வதந:* - தெளிந்ததான திருமுக மண்டலத்தையுடைய, *வரத:*-பேரருளாளனான தேவப்பெருமாள், *ப்ராப்த ஆபிமுக்யாந்* - தன்னைக்கண்டு களிக்க எதிர் நோக்கியுள்ளவர்களாயும், *ஆபத்தாஞ்சலி மஸ்தகான்* - தங்கள் தலை மேலுயர்த்திக் கூப்பிய கைக ளையுடைய வர்களாயும், *அவிரலான் ஜநாந்* - எண்ணற்ற ஸமூஹ மாயுள்ள ஜநங்களை, *ஆபாலம் ஆநந்தயன்* - பாலகர்கள் முதற்கொண்டு மகிழ்விக்குமவராய், *ஆரூட பக்ஷீச்வர:* - பெரிய திருவடி வாஹனம் மேலேறி அமர்ந்தவராய், *மந்த உட்டாயித சாமர:* - மெதுவே மேல் தூக்கி அசைத்து வீசப்பட்ட சாமரங்களை யுடையவராய், *மணிமய ஸ்வேத ஆதபத்ர:* - ரத்னமணி மயமான வெண்கொற்றக் குடைபிடிக்கப் பட்டவராய், *ரானை:* - மெதுவாக, *அந்தர் கோபுரம் ஆவிராஸ* - ராஜ கோபுரத்தினூடே தோன்றியருளினார்.

பொருளுரை:- ஸுப்ரபாத காலத்தில் ஸுப்ரஸந்நமான திருமுகமண்டலத்தை யுடைய தேவப்பெருமாள் அபிமுகர்களாயும், மத்தகத்திடைக் கைகளை கூப்பியவர் களாயும், இடை வெளியில்லாமல் நெருங்கியிருப்பவர்களுமாயும் உள்ள ஜநங்களை, சிறுவர் முதற் கொண்டு ஸந்தோஷப் படுத்துமவராய், பெறிய திருவடியை வாஹனமாகக் கொண்ட வராய், மெதுவாக வீசப்பட்ட சாமரங்களை யுடைவராய், ரத்னமயமான வெண்கொற்ற குடையையுடையவராய், மெல்ல மெல்ல திருக்கோபுரத்தினுள் தோன்றியருளினார்.

## சிறப்புரை

தேவப்பெருமாளுடைய பெரியதிருவடித் திருநாளை ப்ரதம பரிஸ்பந்தமே பிடித்து அநுபவிக்கிறார். அருணோதய வேளையில் அபிமதஜன தர்சநாநந்த வேகத்தாலே அர்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவழிகின்ற அவ்யக்தமதுர மந்தஹாஸ விலாஸத்தோடு கூடின திருமுகமண்டலம் பொலிந்த தேவப்பெருமாள் **சிரஸ்யஞ்ஜலிமாதாய** என்றும், **மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி** என்றுஞ் சொல்லுகிறபடியே உச்சிமிசைக்கரம் வைத்துத்தொழுமவர்களாய், அஹமஹமிகயா வந்து நெருக்குவாரிடையே

அகப்பட்டுத் துடிப்பவர்களான அடியாய்களைச் சிரியார் பெரியாரென்று வாசியின்றிக்கே (ஜநிதர்மாக்களை யெல்லாம்) உகப்பியா நின்றுகொண்டு **காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போல்** என்கிறபடியே பறவையேறுர் ப்ரம்புருடனாய் திருவெண்கொற்றக்குடை பிடிக்குமழகும், சாமரை வீசுமழகும் பொலிய கோபுர ஸேவை தந்தருளுமாறு எழுந்தருளின அழகு என்னே ! என்று ஈடுபடுகிறார்.

मुक्तातपत्रयुगलोभयचामरान्तर्विद्योतमानविनतातनयाधिरूढम् ।
भक्ताभयप्रदकराम्बुजाम्बुजाक्षं नित्यं नमामि वरदं रमणीयवेषम् ॥२

**2. முக்தாதபத்ர யுகலோபய சாமராந்தர்**
**வித்யோதமான விநதா தநயாதிரூடம்**
**பக்தாபயப்ரத கராம்புஜமம்புஜாக்ஷம்**
**நித்யம் நமாமி வரதம் ரமணீயவேஷம்.**

<u>பதவுரை</u>

***முக்தாதபத்ர யுகலௌ*** - வெண்முத்துக் களால் அலங்கரிக்கப்பட்ட இரு குடை களோடும்,
***உபய*** - இரு மருங்கும் இரண்டு,
***சாமர*** - வீசப்பட்ட சாமரங்களின்
***அந்த:*** - இடையே,
***வித்யோதமான*** - பொலிந்து நிற்கும், ***விநத தநய அதிரூடம்*** - விநதையினுடைய திருமகனாரான பெரிய திருவடி மீதேறி அமர்ந்திருப்பவரும்,
***பக்தாபயப்ரத*** - தன்னடியார்களுக்கு 'அஞ்சேல்' என்று காட்டியருளும்,
***கராம்புஜம்*** - தமரையையொத்த திருக் கையையுடையவரும்,
***அம்புஜாக்ஷம்*** - தண்டாமரையையொத்த திருக்கண்களையுடையவரும்,
***ரமணீய வேஷம்*** - பொலிந்து விளங்கும் மனதைக்கவரும் அழகிய தோற்றமுடையவருமான,
***வரதம்*** - வரப்ரதரான பேரருளாளனை, ***நித்யம்*** - எப்பொழுதும்,
***நமாமி*** - இறைஞ்சுகிறேன்

பொருளுரை :- இரண்டு முத்துக்குடைகளென்ன, இரண்டு சாமரைகளென்ன, இவற்றினுள்ளே விளங்காநின்ற வைனதேயனான பெரிதிருவடி மீது ஏறி வீற்றிருப்பவனும், அடியார்களுக்கு அபயமளிக்கும் திருக்கைத் தாமரையுடையவனும், செந்தாமரைக் கண்ணனும், மனோஹரமான திவ்யாலங்காரங்களையுடையவனுமான, பேரருளாளனை இடையறாது வணங்குகின்றேன்.

केचित्तत्वविशोधने पशुपतौ पारम्यमाहु: परे
व्याजह्रु: कमलासने नयविदामन्ये हरौ सादरम् ।
इत्येवं चलचेतसां करधृतं पादारविन्दं हरे:
तत्त्वं दर्शयतीव संप्रति नृणां ताक्ष्र्य: श्रुतीनां निधि: ॥ ३

3. கேசித் தத்வ விசோதநே பசுபதௌ பாரம்யமாஹு: பரே
வ்யாஜஹ்ரு: கமலாஸநே நயவிதாமந்யே ஹரௌ ஸாதரம்
இத்யேவம் சலசேதஸாம் கரத்ருதம் பாதாரவிந்தம் ஹரே:
தத்வம் தர்சயதீவ ஸம்ப்ரதி ந்ருணாம் தார்க்ஷ்ய: ச்ருதீநாம் நிதி:

<u>பதவுரை</u>

*தத்வவிசோதநே* - பரதத்வ விஷய விசாரதில்,
*நயவிதாம்* - சாஸ்த்ரவிசார கண்ணோட்டமுடையவர்களுக்குள்ளே,
*கேசித்* - சிலர், *பசுபதௌ* - பசுபதியான முக்கண்ணனிடத்தில்,
பாரம்யம் - பரதத்வத்தை,
*ஆஹு:* - தெரிவித்தனர்,
*பரே* - வேரு சிலர்,
*கமலாஸநே* - தாமரையில் வீற்றிருப்பவரான நான்முகனிடத்தில்,
*(பாரம்யம்) வ்யாஜஹ்ரு:* - பரத்வத்தை பேசினார்கள், *அந்யே* - மற்றவர்
*ஸாதரம்*- ஆதரவோடு,
*ஹரௌ ( பாரம்யம் ) ஆஹு:* - (பாபங்களை நசிப்பிக்கின்ற) ஹரியாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பரத்வத்தை வெளியிட்டார்கள்,
*இதி ஏவம்* - இப்படியாக,
*சலசேதஸாம்* - சஞ்சலபுத்தியுடைய,
*ந்ருணாம்* - மனுஷ்யர்களின் விஷயத்தில்,

*ச்ருதீனாம் நிதி:* - வேதங்களின் பொக்கிஷமெனப்படும்,
*தார்க்ஷ்ய:* - பக்ஷிராஜனான கருடாழ்வார்,
*ஸம்ப்ரதி* - தற்பொழுது ( இந்த மூன்றாம் திருநாளிலே )
*கரத்ருதாம்* - தம்முடைய உயர்த்திய திருக்கரத் தலங்களிலே தாங்கப்பட்ட,
*ஹரே:* - ஹரியாகிய பரமபுருஷனுடைய, *பாதாரவிந்தம்* - தாமரையடிகளை, *தத்வம்* - பரதத்வமாக ( தேவாதி ராஜப் பெருமாள் ' *அஹமேவ பரம் தத்வம்* ' என்று தன்னுடைய ஆறு வார்த்தையில் ஸாதித்தருளியபடி ) , *தர்சயதி இவ(த்ருச்யதே)*- புலப்படுத்திக் காட்டுவது போல் ஸேவையாகிறது.

பொருளுரை :- **பரத்வமின்னதெனறு ஆராயுமளவில், சாஸ்த்ரமறிந்தவர்களுக்குள்ளே சில மதஸ்தர்கள் ருத்ரனிடத்தில பரத்வத்தைக் கூறினர்; வேறு சிலர் நான்முகக் கடவுளிடத்தில் பரத்வமுள்ளதாகப் பகர்ந்தார்கள்; மற்றையோர்கள் ஆதரத்தோடு கூட ஸ்ரீமந் நாராயணன் இடத்தில் பரத்வமுள்ளதாகச் சொன்னார்கள்; (இப்படி பலரும் பலவாறாகச் சொல்லு கின்றார்களே; ஒருவிதமான நிஷ்கர்ஷமில்லையே!) என்று தளும்பின நெஞ்சை யுடையரான மனிசர்க்கு (தெளிவு பிறப்பிக்க வேண்டி) வேதங்களுக்கு நிதியான பெரிய திருவடியானவர் இப்போது (இத்திரு நன்னாளிலே) தம்முடைய கைத்தலத்திலே தாங்கப் பட்ட எம்பெருமானுடைய திருவடித் தாமரையை பரதத்துமாக் காட்டுகின்றார் போலும்.**

### சிறப்புறை

பெரிய திருவடி பேரருளாளருடைய திருவடித் தாமரையிணையைத் தன் கைத்தலத்திலே ஏந்திக்கொண்டு வருவதை நோக்கி ஒரு **உத்ப்ரேக்ஷை** பண்ணுகி- றார் இந்த ச்லோகத்தில், ஸம்யங்ந்யாயாநுக்ருஹீத ப்ரமாண பராமர்சத்தாலும், ஸதாசார ஸேவையாலும் ஸந்தேஹ விபர்யமறப் பரதத்வத்தை நிஷ்கர்ஷித்துரை வல்லமையின்றிக்கே சஞ்சலபுதிகளாயுள்ள வர்களுக்கு ஒரு தெளிவை பிறப்பிக்க எண்ணின வேதாத்மாவான விஹகேஸ்வரன், **ஸ்ரீமந் நாராயணனுடைய இந்தத் திருவடித்தாமரையே காணீர் பரத்வம் !** என்று கரஸ்தமாக்கிக் காட்டுகிறாப் போலுள்ளது என்றார் ஆயிற்று. ஒரு பக்ஷி காட்டிவிட்டால் இதையே தத்துவமாக விச்வஸிக்க விரகுண்டோ வென்கிற சங்கைக்கு இடமில்லாதபடி **ச்ருதீனாம் நிதி:** என்று கருத்மானுக்கு விசேஷணமிட்டார். **வேதாத்மா விஹகேச்வர:** என்று

ஆளவந்தாரும் அருளிச்செய்தார். *ஸுபர்ணோஸி கருத்மாந் த்ரிவ்ருத்தே சிர:* இத்யாதி வேதவாக்யமும் இங்கு அநுஸந்தேயம்.

यद्वेदमौलिगणवेद्यमवेद्यमन्यैः
यद्ब्रह्मरुद्रसुरनायकमौलिवन्द्यम् ।
तत्पद्मनाभपदपद्ममिदं मनुष्यैः
सेव्यं भवद्भिरिति दर्शयतीव तार्क्ष्यः ॥४॥

**4. யத்வேதமௌலிகண வேத்யமவேத்யமந்யை:**
**யத்ப்ரஹ்மருத்ர ஸுரநாயக மௌலி வந்த்யம்**
**தத்பத்மநாப பதபத்மமிதம் மநுஷ்யை:**
**ஸேவ்யம் பவத்பிரிதி தர்சயதீவ தார்க்ஷ்ய:**

<u>பதவுரை</u>

*பத்மநாப* - தாமரையுந்திப் பெருமானுடையதான, *யத் பதபத்மம்* - எந்தத் தாமரை அடியானது, *வேதமௌலி கண* - மறைகளின் தலையான ( உபநிடத ) தொகுப்புக் களாலேயே, *வேத்யம்* - அறியப்படவேண்டியதும், *அந்யை:* - ( அவைதிகர்களான ) மற்றையோர்களால், *அவேத்யம்* - அறியப்படவேண்டாததும், *ப்ரஹ்ம ருத்ர ஸுரநாயக* - பிரமன், சிவன், தேவேந்திரனாகியோர்களும், *மௌலி வந்த்யம்* - தங்கள் முடி தாழ்த்தி வணங்கக்கூடியதுமான, *தத்* - அப்படிப்பட்டதான, *இதம்* - இந்தத் திருவடியே, *பவத்பி:* - மானுடர்களான நீங்களால், *ஸேவ்யம் இதி* - ஸேவிக்கத் தகுந்தது என்று, *தார்க்ஷ்ய:* - கத்ருசஷு(விநத)குமாரனாகிய கருத்மான், *தர்சயதி இவ* - ( காணத் தகுந்ததாகக் ) காட்டுகிறார் போல் தோற்றமளிக்கிறது.

பொருளுரை :- (ஓ வைதிக ஜனங்களே!) எம்பெருமானுடையதான எந்தத் திருவடியானது வேதாந்தங்களுக்கே அறியக்கூடியதோ, (வைதிகர்களல்லாத) மற்றையோர்க்கு அறியக் கூடாததோ, யாதொரு திவடியானது பிரமன், சிவன், இந்திரன் ஆகிய இவர்கள் முடிதாழ்த்தி வணங்கக்கூடியதோ, அப்படிப்பட்ட இந்தத் திருவடியானது உங்களால் ஸேவிக்கத் தகுந்தது என்று கருத்மான் (கையிலேந்திக்) காட்டுகின்றான் போலும்.

प्रत्यग्गोपुरसंमुखे दिनमुखे पक्षीन्द्रसंवाहितं
नृत्यच्चामरकोकरं निरुपमच्छत्रद्वयीभासुरम् ।
सानन्दं द्विजमण्डलं विदधतं सन्नाहचिह्नारवैः
कान्तं पुण्यकृतो भजन्ति वरदं काञ्च्यां तृतीयोत्सवे ॥५॥

5. ப்ரத்யக் கோபுர ஸம்முகே திநமுகே பக்ஷீந்த்ர ஸம்வாஹிதம்
ந்ருத்யச்சாமர கோகரம் நிருபம ச்சத்ரத்வயீ பாஸுரம்
ஸாநந்தம் த்விஜமண்டலம் விததத‌ம் ஸந்நாஹ சிஹ்நாரவை:
காந்தம் புண்யக்ருதோ பஜந்தி வரதம் காஞ்ச்யாம் த்ருதீயோத்ஸவே

பதவுரை

*காஞ்ச்யாம்* - திருக்கச்சி என்னும் திவ்ய தேசத்திலே,
*த்ருதீயோத்ஸவே* - ( தேவாதிராஜப் பெருமாளின் ) மூன்றாம் உத்ஸவத் திருநாளன்று,
*திநமுகே* - தினத்தின் துவக்கமான பின்மாலை வேளையில்,
*பக்ஷீந்த்ர:* - பக்ஷிராஜனான கருடாழ்வாரால்,
*ஸம்வாஹிதம்* - ( தனது தோள்களின் மேல் அமர்த்தப்பட்டு ) நன்கு தாங்கப்பட்டவரும்,

*ந்ருத்யத் சாமர கோகரம்* - (தாமரை) மொட்டுக்கள் போன்று அசைந்தாடு- கின்ற கவரிகளாலான சாமரங்கள் வீசப்பெற்றவரும்,
*நிருபமச்சத்ரத்வயீ* - ஒப்பற்ற, இரண்டு திருக்குடைகளின் நிழலில்,
*பாஸுரம்*- பொலிந்திருப்பவரும்,

*ஸந்நாஹ* - ( திருவீதி உலா புறப்படத் ) தயாரென்பதைத் தெரிவிக்கின்ற,

*ஸிஹ்ன* - திருச்சின்ன மென்னும் *ஆரவை:* - காஹள ஒலியினால், *த்விஜ மண்டலம்* - ( கோஷ்டியாக எழுந்தருளியுள்ள ) இருமறையோதும் ( ஸ்ரீவைஷ்ணவ ) அந்தணர் குழாமை, *ஸாநந்தம் விதததம்* - மகிழ்வூட்டுபவரும், *காந்தம்* - பொலிந்தவழகு பொருந்தியவருமான,

*வரதம்* - அபீஷ்ட வரங்களையீந்தருளும் பேரருளாளப் பெருமாளை, *புண்யக்ருத:* -புண்ணியவான்களான பகவதடியார்கள், *ப்ரத்யக்கோபுரஸம்முகே* - மேல்திசைத் திருக்கோபுர வாசலிலே, *பஜந்தி* - போற்றி பாடி வணங்கி வழிபடுகிறார்கள்.

பொருளுரை : - திருக்கச்சி மாநகரில் மூன்றாவது உத்ஸவ நன்நாளில் ஸுப்ரபாத வேளையில், பெரியதிருவடியினால் தாங்கப்பட்டவரும், சாமரமுகுளம் வீசப்பெற்றவரும், ஒப்பற்ற இரண்டு திருக்குடைகளினிடையே விளங்கா நிற்பவரும், புறப்பாடு ஸித்தமாயிற்றென்று தெரிவிக்கிற திருச்சின்ன வொலியினால் மறையவர் திரளை மகிழச் செய்பவரும், மிக அழகு பொருந்தியவருமான பேரருளாளப் பெருமாளை பாக்யசாலிகள் மேலைத் திருக்கோபுர வாசலில ஸேவிக்கப் பெறுகிறார்கள்.

சிறப்புறை

"धन्या: पश्यन्ति मे नाथम् " ( தன்யா: பச்யந்தி மே நாதம் ) என்று பிராட்டி வருந்திச் சொன்னதுபோல இங்கும் " புண்யக்ருதோ பஜந்தி " (पुण्यकृतो भजन्ति) என்று தம் இழவுதோற்றச் சொல்லியிருக்கையாலே, இந்த மஹோத்ஸவ ஸேவை தமக்கு ப்ராப்தமாகப் பெறாதகாலத்திலே பணித்தது இந்த ச்லோகபஞ்சகமென்று விளங்குகின்றது.

சோளஸிம்ஹபுரம் தொட்டையாசார்யர் பணித்த

## ஸ்ரீ தேவாதிராஜ பஞ்சகத்திற்கு

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்யர் இயற்றிய உரை முற்றிற்று.

